கூட்டங்களில் கலந்துகொண்ட எம்.எல்.ஏ.-க்களுக்கும், எம்.பி.-க்களுக்கும் இதுவரை பிரயாணப்படி கொடுக்கப்படவில்லை என்பது உண்மையா ?

*(இ) அப்படியானால் இது விஷயமாய் அரசாங்கம் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?*

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) No Sir, Travelling Allowance has been disbursed to all persons who have preferred their claims for attending the meetings of the erstwhile District Planning Boards and the present District Development Councils held during the period from April 1957 to April 1960. No Travelling Allowance claim relating to the period in question is pending either with the Collector or with the Government.

(*b*) Does not arise.

*Ancient Inscriptions*

* **539 *Q*.—SRI A. VEDARATHNAM:** *கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) தஞ்சை ஜில்லா திருவையாற்றில் சமீபத்தில் புராதனக் கல்வெட்டுச் சின்னங்கள் கண்டு பிடிக்கப்பட்டனவா ? அப்படியானால், எப்போது ? எங்கே ?*

*(இ) அவை பற்றிய முழு விவரம் என்ன ?*

*(உ) கல்வெட்டுப் பரிசோதகர்கள் அவற்றை ஆராய்ச்சி செய்தார்களா ? அதன் விவரமென்ன ?*

THE HON. SRI C. SUBRAMANIAM : *(அ)* Yes, Sir. Some inscriptions have been recently noticed by a local scholar, in the Siva Temple at Perumbuliyur near Thiruvaiyaru.

*(இ)* & *(உ)* No expert opinion has so far been obtained. The matter has been remitted to the Government Epigraphist for India, Ootacamund, for necessary action.

*Jain idol*

* **540 *Q*.—SRI A. VEDARATHNAM:** *கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) தஞ்சை ஜில்லா, பாபநாசம் தாலூகா, முன்னியூர் கிராமத்தில் சமண சிற்பம் கண்டு பிடிக்கப்பட்டுள்ளதா ?*

*(இ) அதுபற்றிய விவரமும் நிபுணர் அபிப்பிராயமும் என்ன ?*

THE HOO. SRI C. SUBRAMANIAM : (அ) Yes, Sir. *(இ)* No expert opinion has so far been obtained. The matter has been remitted to the Superintendent, Department of Archaeology, Southern Circle, for necessary action.

3rd March 1961]

**SRI A. VEDARATHNAM:** தலைவர் அவர்களே, இங்கிருந்து கிடைத்த கல்வெட்டுகளிலிருந்து நம்முடைய சரித்திரத்திற்குப் பயன்படக்கூடிய வகையில் ஏதாவது விவரங்கள் கிடைத்ததா? அதைப்பற்றி ஏதாவது ஆராய்ச்சி செய்யப்பட்டதா? அப்படியானால் அதன் விவரங்கள் என்ன என்பதை அறிவிக்க முடியுமா?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** இன்னும் அதனுடைய விவரங்கள் தெரியவில்லை. இதைப்பற்றி ஆராய்ச்சி செய்வதற்காக ஆர்கியலாஜிக்கல் டிப்பார்ட்மெண்ட்டுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது.

**SRI A. VEDARATHNAM:** பாபநாசம் தாலூகா அருகில் சமணர்களுடைய விக்கிரகம் கிடைத்திருப்பதாகத் தெரிகிறது. இதைத் தவிர வேறு என்னென்ன விக்கிரகங்கள் கிடைத்தன? கிடைத்த விக்கிரகத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்த நிபுணர்களுடைய அபிப்பிராயம் என்ன?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** என்னென்ன விக்கிரகங்கள் கிடைத்தன என்கின்ற விவரங்கள் இப்போது என்னிடம் இல்லை. இதில் கிடைத்த விக்கிரகமும் ஆர்கியலாஜிக்கல் டிப்பார்ட்டுமெண்டுக்கு ஆராய்ச்சி செய்வதற்காக அனுப்பப்பட்டிருக்கிறது.

**SRI V. K. KRISHNAMURTHY:** தலைவர் அவர்களே, கல்வெட்டுகளிலிருந்து கிடைக்கும் விவரங்களை நூல் வடிவமாக்க பல்கலைக் கழகமாவது அரசாங்கமாவது முன் வருமா?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** இதைப்பற்றி இப்போது இந்து மத பரிபாலன போர்டும் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது. இதைத் தவிர அரசாங்கம் தனியாக எந்த அளவுக்கு இதில் முயற்சி எடுக்க வேண்டுமோ அந்த அளவுக்கு முயற்சி எடுத்துக்கொண்டு வருகிறது. நமக்கு என்று தனியாக ஒரு ஆர்கியலாஜிக்கல் டிப்பார்ட்மெண்ட் ஏற்படுத்தவும் முயற்சி எடுக்கப்பட்டு வருகிறது.

**SRI A. VEDARATHNAM:** இப்போது நமக்குக் கிடைத்திருப்பதைத் தவிர இன்னும் சின்னங்களையும் கல்வெட்டுகளையும் வெட்டி எடுக்க அரசாங்கம் முயற்சி செய்யுமா?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** எண்ணெய், மற்றும் ஏதாவது உலோகங்கள் கிடைக்குமா என்பதைப்பற்றி ஆராய்ச்சி செய்கின்ற நேரத்தில் இம்மாதிரிப்பட்ட சின்னங்கள் கிடைத்தால் அதைப்பற்றியும் ஆராய்ச்சி செய்யப்படும்.

SRI S. RANGANATHA MUDALIAR: Is there any proposal to start an Archaeological Department for our State and if so, may I know how long will it take to form such a Department?

THE HON. SRI C. SUBRAMANIAM: I have already stated that attempts are being made in that direction. However, I am unable to say just now how soon it would be set up?